12th February 1958]

SRI N. K. PALANISAMI : கூட்டிப் பார்த்தால் தெரியும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். கூட்டிப் பார்த்தால் இவர்களுக்கு 88 ரூபாய் வருகிறது. அவர்களுக்கு ரூ. 136 வருகிறது. ஆகவே, இவர்களுக்கும் அவர்கள் சம்பளத்தைக் கொடுப்பதற்கு சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கூட்டல் கணக்கு தவறு என்று சொல்ல விரும்புகிறேன்.

*Construction of a Dam across Parambikulam.*

* 57 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Public Works be pleased to state the present stage of the proposal to construct a dam across Parambikulam near the source? 8-50 a.m.

THE HON. SRI P. KAKKAN : The matter is under negotiation with the Government of Kerala.

SRI A. A. RASHEED : Sir, when will the scheme be taken up and implemented?

THE HON. SRI P. KAKKAN : After the negotiation is completed, it will be taken up.

SRI RASHEED rose.

MR. SPEAKER : The Hon. Minister has told you that the matter is under negotiation. . . All right, I will allow one more question.

SRI A. A. RASHEED : Is it a fact that the Kerala Government are not co-operating with the Madras Government?

MR. SPEAKER : That would not be correct to ask. I disallow that question.

*Local Development Works.*

* 58 *Q.*—SRI M. P. SUBRAMANIAM : Will the Hon. Chief Minister be pleased to state—

(*a*) the amount allotted for Local Development Works in the State for the year 1957–58; and

(*b*) the amount allotted from out of it for the Salem district?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Rs. 140 lakhs.

(*b*) Rs. 14·68 lakhs (fourteen lakhs and sixty-eight thousands).

SRI K. R. VISVANATHAN : தலைவர் அவர்களே, இந்த இடவளர்ச்சித் திட்டங்களின்கீழ் செய்யப்படுகிற வேலைகளுக்கு ஆங்காங்கு ஒவ்வொரு மாவட்டத்திலும் என்ஜினீயர்களும் அமர்த்தப்படுகிறார்கள். அவர்களின் கீழ் போதுமான சூபர்வைசர்கள் அல்லது ஜூனியர் என்ஜினீயர்கள் அமர்த்தப்படாத காரணத்தினால் வேலைகள் துரிதமாக நடைபெறாமல் காலதாமதமாகிறது. ஆகையால் இடவளர்ச்சித் திட்டத்தின் கீழ் போதுமான சூப்ரவைசர்களை சர்க்கார் அமர்த்துவார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

[12th February 1958

THE HON SRI C. SUBRAMANIAM : கேட்கப்பட்டிருக்கிற மூல கேள்விக்கும், இந்த உப கேள்விக்கும் சம்பந்தம் கிடையாது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : 1958–59-ம் வருஷத்திலும் இந்தத் திட்டங்கள் தொடர்ந்து நீடிக்குமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது 140 லட்சம ரூபாயில் 90 லட்சம் ரூபாய் மார்ச் 31-ந் தேதிக்குள் செலவு செய்கிற வகையில் திட்டங்கள் நடைபெறவேண்டும் என முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதற்குப் பின் 50 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டு இவ்வாண்டு வேலைகளுக்காக அப்பணம் ஒதுக்கப்பட்டிருந்தாலும் 1958–59-லும் அவ்வேலைகள் தொடர்ந்து நடைபெறவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

SRI R. KRISHNASAMI NAIDU : ஒவ்வொரு ஜில்லாவிலும் ஸ்தல அபிவிருத்தி திட்டங்களின் கீழ் சில குறிப்பிட்ட இடத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தைக் கொண்டு அப்பகுதியில் அந்தத் திட்ட வேலையைச்செய்ய தயாராய் இல்லையென்றால் அதே பணத்தைக்கொண்டு அதே ஜில்லாவில் இன்னொரு பகுதியில் அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்குச் சர்க்கார் அனுமதிக்குமா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தொகை எப்படி ஒதுக்குவது என்பதைப்பற்றி கலெக்டர் ப்ளானிங் கமிட்டியைக் கலந்துகொண்டு தான் ஒதுக்கி வருகிறார். ஒரு தாலூகாவுக்காக ஒதுக்கப்பட்ட பணத்தைக் கொண்டு அந்தத் தாலூகாவில் உள்ளவர்கள் வேலை செய்யத் தயாராய் இல்லையென்றால் அப்பணத்தை இன்னொரு தாலூகாவிற்கு ஒதுக்குவதில் சாதாரணமாக ஆட்சேபணை இருக்கமுடியாது.

SRI A. R. MARIMUTHU : ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களின் கீழ் வேலை செய்வதற்கு மக்கள் இப்போது உற்சாகமாக முன் வருகிற காரணத்தினால், வரும் வருஷத்துலாவது அதிகப்படியான தொகையை இத்திட்டங்களுக்காக ஒதுக்க சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பணம் ஒதுக்குவது நிதி வசதியைப் பொறுத்திருக்கிறது. இன்னும் பல காரியங்கள் செய்ய வேண்டியிருக்கிறது என்பதை ஒப்புக்கொள்கிறேன். நிதி வசதியை அனுசரித்து ஒவ்வொரு வருஷமும் பணம் ஒதுக்கப்படும்.

SRI G. GOMATHISANKARA DIKSHITAR : இந்த அபிவிருத்தித் திட்டங்களின்கீழ் திருநெல்வேலி ஜில்லாவில் பல வேலைகள் நடைபெற வேண்டியிருப்பதால் அதிகமான தொகையை ஒதுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கேட்கப்பட்டிருக்கிற கேள்வி சேலம் ஜில்லாவைப்பற்றியது. திருநெல்வேலி ஜில்லா பற்றிய புள்ளி விவரம் எதுவும் இல்லை.

MR. SPEAKER : தனிக் கேள்வி கேட்கவும்.

SRI M. P. SUBRAMANIAM : இந்தத் திட்டங்களுக்காக 150 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லி அதில் 90 லட்சம் ரூபாய் தான் மார்ச் 31-ந் தேதிக்குள் செலவு செய்யப்படும்படி முடிவு செய்திருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். 140 லட்சம் ரூபாயில் 90 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டதற்குக் காரணம் வேலை நடைபெறாது என்பதாலா, நிதிவசதியை அனுசரித்தா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த வருஷ ஆரம்பத்தில் 90 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்கான வேலை நடைபெற்றுக் கொண்டு வருகிறபோது இப்போது 50 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். இதையும் மார்ச் 31-ம் தேதிக்குள் செலவு செய்து விடவேண்டுமென்றால் செய்யப்படுகிற வேலைகள் அவசரம் அவசரமாகச்

12th February 1958]

செய்யப்பட்டு மோசமாக ஆகிவிடக்கூடாது என்ற காரணத்தினால் இவ் வேலைகள் உடனடியாகச் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. தொடர்ந்து அடுத்த வருஷ முடிவிற்குள் செய்யலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**Sri K. ANBAZHAGAN :** இட வளர்ச்சித் திட்டத்தின் கீழ் போடப்படுகிற திட்டங்கள் எல்லாம் அந்த அந்த வட்டாரம், தொகுதி எம்.எல்.ஏ.க்களைக் கலந்து கொண்டு போடப்படுகிறதா ? பணத்தையும் தொகுதி வாரியாகப் பிரித்து அளிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அந்த அந்தப் பகுதி மக்கள் ஒத்துழைக்க எவ்வளவு தூரம் தயாராய் இருந்தார்களோ அவ் வளவு தூரம் பணமும் ஒதுக்கப்பட்டு வந்திருக்கிறது. இப்போது எல்லா இடங்களிலுமே உற்சாகம் ஏற்பட்டு எல்லோருமே பங்கு எடுத்துக்கொள்ளத் தயாராய் இருக்கிறார்கள். ஆகவே இப்போது ப்ளானிங் பாடியை கலந்து கொண்டு தாலூகா வாரியாகவே பணம் ஒதுக்கப்படுகிறது.

*Cinema Theatres.*

* 59 *Q.*—**Sri P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state ; the number of (i) permanent and** (ii) touring cinema theatres in the State?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : **There are 334** permanent cinemas and 353 touring cinemas in this State.

Sri P. G. MANICKAM : தலைவர் அவர்களே, சினிமாத் தியேட்டர்களில் பெண்களுக்கு திரையை ஒட்டி இடம் ஒதுக்கப்பட்டிருக்கிற காரணத்தினால் மின்விசையினால் பெண்களுடைய கண்கள் கெட்டுப்போகின்றன. ஆகவே பெண்களுக்குப் பாதுகாப்பான இடத்தில் பின்னால் வசதியாக இடம் ஒதுக்குவதற்கு ஏற்பாடு செய்வார்களா என்று கேட்கிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இப்போது அமுலில் இருக்கிற விதிப்படி பெண்களுக்கு தனியாக ஸ்தானம் ஒதுக்குவது இல்லை. ஏதோ வேண்டுமென்றால் பின்னால் இடம் இருக்கட்டும் என சினிமா தியேட்டர் சொந்தக்காரர்கள் வைத்திருக்கிறார்களே தவிர பெண்கள் எங்கு சௌகரியமோ அங்கு உட்கார்ந்துகொள்ளலாம்.

*Saraswathi Mahal Library, Tanjore.*

* 60 *Q.*—Sri A. VEDARATHNAM PILLAI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have taken any steps to publish the old valuable manuscripts in the Saraswathi Mahal Library at Tanjore; and

(*b*) if so, what they are?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) Since 1948–49, the Government have been sanctioning grants for the publication of important manuscripts of the library. An Expert Committee appointed by the Government selects the manuscripts for publication. A sum of rupees one lakh was paid to the library during the period from 1948–49 to 1951–52 towards the publication of manuscripts. Since then, the Government have